"உணர் மனதின் அறிவு மற்றும் அகங்காரப் பகுதிகளின் செயல்பாட்டினாலேயே, இந்த மன பதட்டங்கள் ஏற்பட்டு விடுகின்றன.

நாம் ஏதாவது செய்யவேண்டுமானால் நமது அறிவின் உதவியோடு தான் செயல்பட்டாக வேண்டும். தேவைக்கு அதுதான் வழிகாட்ட வேண்டும். ஆனால் தேவையில்லாதவற்றுக்கும் அது வழிகாட்டுகிறது. இதை எப்படிச் சீரமைப்பது? 3 ஆம் பக்கம்

# ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்

## (இரண்டு உறுப்பினர்கள் மட்டுமே)




உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரியகவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் இருப்பிடமான இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்றுவருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லாததால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு நிறைவடைந்துள்ளது.

ஸ்ரீபகவத் காட்டேஜ் திறப்பு விழா 25-2-2021 வியாழக்கிழமை அன்று காலை 11 மணிக்கு சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் திருக்கரங்களால் திறந்து வைக்கப்பட்டது.

இத் திறப்பு விழா ஒரு குடும்ப நிகழ்ச்சியில் எப்படி இருக்குமோ அப்படி அனைத்து உறுப்பினர்களுடன் சிறப்பாக கொண்டாடப்பட்டது.

அனைத்து ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்களையும் ஸ்ரீ பகவத் மிஷன் கௌரவித்து சிறப்பித்தது.

இதுவரை 8 பெரிய அறைகளுக்கான உறுப்பினர்கள் சேர்க்கை நிறைவடைந்ததைத் தொடர்ந்து 6 சிறிய அறைகளுக்கான உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள்.

இன்னும் இரண்டு உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளனர்.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்துள்ளோம்.

உறுப்பினராக இணைபவரைத் தொடர்ந்து அவருக்குப் பிறகு இந்த உறுப்பினர் தகுதி அவரது குடும்ப உறுப்பினர்களில் ஒருவருக்கு சேர்ந்து விடும்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், மாதத்திற்கு 20 நாட்கள் வீதம் வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கிச் செல்லலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

**இன்னும் 2 உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், வாய்ப்புள்ளவர்கள் உடனடியாகத் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.**

**ஸ்ரீ பகவத் மிஷனோடு உங்களது பந்தம் உங்கள் தலைமுறையையும் தாண்டி தொடரட்டும்... அவர்களது வாழ்வும் சிறக்கட்டும்.**

அன்புடன், **ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3.

**Cell : 99942 05880, 97891 65555**




# உணர் மனம் – 2

- ஸ்ரீ பகவத்

அந்தப் பெரிய பங்களாவின் வரவேற்பு அறையின் வெளி வாசலில் வாயிற்காவலன் நின்று கொண்டிருந்தான்.

வரவேற்பு அறையில் பங்களா உரிமையாளர் எவருடனோ போனில் பேசிக்கொண்டிருந்தார்.

அந்நிலையில் முரட்டுத்தனமான ஒருவர் காம்பௌண்டிற்குள் நுழைந்து "ஐயாவை பார்க்க வேண்டும்" என காவலாளியிடம் கேட்டார்.

அவரது இடுப்பில் பெரிய பட்டாக்கத்தி ஒன்றை வேறு சொருகி வைத்திருந்தார்.

அவரை உள்ளே அனுப்ப காவலாளிக்கு தயக்கம். ஆகவே அவர் உரிமையாளரை இன்டர்காமில் தொடர்பு கொண்டு விவரத்தைச் சொல்லவும்,

அவர் உள்ளே அனுப்ப அனுமதி கொடுத்தார்.

அந்த முரட்டு மனிதர் வரவேற்பறையினுள் நுழைந்தார். உரிமையாளரை பார்த்த அவர் வணக்கம் செலுத்திவிட்டு,

இடுப்பில் சொருகியிருந்த பட்டாக்கத்தியைக் கழற்றி உரிமையாளர் முன்னாலிருந்த டீப்பாயின் மீது வைத்துவிட்டு,

மீண்டும் வணக்கம் தெரிவித்தவாறே வெளியேறிப் போய் விட்டார்.

வாயிற்காப்போனும் நிம்மதிப் பெருமூச்சு விட்டான்.

இங்கு வாயிற்காப்போனாக வருவதுதான் நமது உணர் மனம். நமது Conscious Mind.

சந்தேகப்படுவதும், ஆபத்து ஏற்பட்டுவிடுமோ என்று அஞ்சுவதும், இப்படி ஆகிவிடுமோ, அப்படி ஆகிவிடுமோ என்று குழம்புவதும் அதனுடைய இயல்பு.

வீட்டு உரிமையாளராக வருவதுதான் முழு மனம். இதுதான் Total Mind. தேவையில்லாததை எல்லாம் எண்ணி இது தன்னைக் குழப்பிக் கொள்வதில்லை.

இது தேவைக்கேற்ப செயல்பட்டு, எதிர்கொள்ளும் பிரச்சனைகள் அனைத்தையும் எளிதாக கையாண்டு விடும்.

நாம் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் மூன்று வகையான தன்மைகளைக் கொண்டவை ஆகும்.

1. முழுவதும் மனோரீதியானவை.
2. முழுவதும் செயல் ரீதியானவை.
3. மனமும் செயலும் கலந்த கலவையானவை.

-இப்படி அவை மூன்று வகைகளாக உள்ளன.

நமது குடும்பத்தில் உள்ள ஒருவர் உடல் நலமில்லாமல் சிகிச்சையும் பலன் தராமல் இறந்து விடுகிறார்.

அவரது இழப்பை நம்மால் தாங்க முடியவில்லை. மனவேதனை நம்மை வாட்டி வதைக்கிறது.

இறந்து போனவர் இறந்து போனதுதான். எந்த சிகிச்சையாலும் அவரை மீட்க முடியாது. ஆனால் நமது மன வேதனை மட்டும் நமக்கு துன்பத்தைக் கொடுத்து அதுவே நமது பிரச்சினையாக உள்ளது.

இதுதான் முதல்வகை பிரச்சினை. இது முழுவதும் அகவயமானது. நமது மனதில் மட்டுமே இது பிரச்சினையாக உள்ளது.

இந்தப் பிரச்சினைக்கு நாம் என்ன செய்து தீர்வு காண வேண்டும்?

இங்கு நாம் செயல்படுவதற்கு எதுவுமில்லை என்பதை மட்டுமே புரிந்து கொண்டால் போதும்.

நமது மன வேதனையை மனப்பூர்வமாக ஏற்றுக்கொண்டால் மட்டும் போதும்.

இந்த முதல்வகை பிரச்சினை தாமாகவே சரியாகிவிடும்.

அடுத்து வருவது இரண்டாவது பிரச்சினை. அது எவ்வாறு உள்ளது?

நண்பகல் நேரம். நமக்கு நல்ல பசி. மேஜையில் உணவு தயாராக உள்ளது.

பசிதான் நமது பிரச்சனை. சாப்பிடுவதுதான் தீர்வு.

இது முழுமையாக செயல் சம்பந்தப்பட்டதாகும்.

செயலின் மூலமாகத்தான், செயல்பட்டுதான் இந்த பிரச்சனைக்கு நாம் தீர்வு காண முடியும்.

ஆன்மிகம் சம்பந்தப்பட்ட அனைத்து முயற்சிகளும் முதல் வகை பிரச்சினையோடு சம்பந்தப்பட்டவை. இங்கு முயற்சிதான் பிரச்சினை.

முயற்சிகளைக் கைவிடுவதன் மூலம் முதல்வகை பிரச்சினையும் தீர்வு பெறுகிறது. ஆன்மிக உயர்வும் கிடைக்கிறது.

உலகியல் முன்னேற்றங்கள் அனைத்தும் இரண்டாவது பிரச்சினையோடு தொடர்பு கொண்டவை.

செய்ய வேண்டியதைச் செய்யாமல் இருப்பதன் காரணமாகவே நமது வீடும், நமது நாடும், சமுதாயமும் பிரச்சினையில் உள்ளன.

செய்ய வேண்டிய செயல்கள் அனைத்தையும் நேர்த்தியாக செய்திடுவதன் மூலமே நமது நாடும் வீடும் சுபிட்சம் அடைய முடியும்.

இதைப் போன்று புத்தர் கூட மனதையும் உடலையும் இணைத்து உபதேசம் ஒன்றைக் கொடுத்துள்ளார்.

"அசைவற்று இருப்பதன் மூலம் நமது மனம் பலம் அடைகிறது.

அசைத்து பயன்படுத்தும் அளவுக்கு நமது உடல் பலம் பெறுகிறது"

மூன்றாவதாக நாம் பார்க்கப்போவதுதான் மிக முக்கியமான பிரச்சினை. மனோரீதியான பிரச்சினையும் செயல் ரீதியான பிரச்சினையும் பின்னிப் பிணைந்து அமைந்துள்ளதுதான் இந்த மூன்றாவது வகைப் பிரச்சனை.

முதல்வகை பிரச்சனைக்கு "சும்மா இரு" என ஒரே வார்த்தையில் தீர்வு கொடுத்துவிடலாம்.

அதுபோல இரண்டாம் வகை பிரச்சனைக்கும் "செய்து முடி" என ஒரே வார்த்தையில் தீர்வு கொடுத்துவிடலாம்.

இந்த மூன்றாவது வகை பிரச்சனையை அவ்வளவு சுலபமாக நம்மால் எதிர்கொள்ள முடியாது.

ஒரே வார்த்தையில் இங்கு தீர்வு கொடுத்துவிட முடியாது.

ஏனெனில், இங்கு மன அம்சமும் செயல் அம்சமும் கலந்து கிடக்கிறது.

செயல்படாமல் "சும்மா இரு" என்பதை பின்பற்றவேண்டிய அம்சமும் இங்கு உள்ளது.

அதுபோல "முயன்று செயல்பட்டு வெற்றி பெறு" என்பதைப் பின்பற்ற வேண்டிய அம்சமும் இங்கு உள்ளது.

எங்கு எதைச் செய்வது, எங்கே எதையும் செய்யாமல் இருப்பது என்பது அனைவருக்குமே குழப்பத்தை ஏற்படுத்தக் கூடிய ஒன்றுதான்.

நமது முழு மனம் (Total Mind) என்பது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என நான்கும் சேர்ந்த அம்சமாகும்.

முழு மனம் (Total Mind) செயல்படும் போது அங்கு எந்த குழப்பமும் கிடையாது.

உணர் மனம் (Conscious Mind) செயல்படும் போதுதான் நமது பிரச்சினைகள் நம்மை தடுமாற வைத்து விடுகின்றன.




நமது முழு மனதின் அங்கமாக இருக்கும் புத்தியானது 100% சக்தி உடையது.

ஆனால் உணர் மனதின் அங்கமாக இருக்கும் புத்தியானது வெறும் 10% சக்தி மட்டுமே உடையது.

ஆகவே உணர் மனதின் பகுதியாக இருக்கும் புத்தியானது முடிவெடுக்க முடியாமல் பலவற்றை எண்ணி குழம்பும் தன்மையில் உள்ளது. அதுதான் அதனுடைய இயல்பு.

உணர் மனதின் சிறிய பகுதியாக இருக்கும் புத்திதான், உணர் மனதுக்கு மனம் என்ற தகுதியையே கொண்டு வருகிறது.

மனம் என்றாலே முடிவு எதுவும் செய்யாமல் இப்படியும் அப்படியுமாகப் பலவற்றையும் காட்டும் ஆலோசனை அம்சமாகச் செயல்படுவது மட்டுமே ஆகும்.

உணரும் தன்மை தான் உணர் மனதின் பிரதானமான இயல்பு. அதுதான் 70% பகுதியாக உள்ளது. ஆனால் அது தன்னை முன்னிலைப்படுத்த ஒருபோதும் முயலாத காரணத்தினால் தன்னுடைய சிறிய பகுதியாக மட்டுமே உள்ள புத்திக்கும் அகங்காரத்துக்கும் தன்னையே விட்டுக் கொடுத்து விடுகிறது.

– அடம்பிடிக்கும் பேரக்குழந்தையிடம் தாத்தா விட்டுக் கொடுத்து விடுவதைப் போல்.

முழுமனது செயல்படும் போது நமது

பிரச்சனை எளிதாக எதிர்கொள்ளப்படுகிறது.

உணர் மனம் செயல்படும் போதுதான் நாம் நமது பிரச்சனைகளை எதிர்கொள்ளும் போது அது ஒரு போர்க்களமாக மாறிவிடுகிறது.

உணர் மனது செயல்படும் போதும், உணர் மனத்தின் பிரதான அம்சமான உணரும் தன்மையே பிரதானமாக செயல்படுமேயானால் அங்கு போராட்டம் எதுவும் இல்லை.

உணர் மனதின் அறிவுப் பகுதியும் (புத்தி), அகங்காரமும் உணர் மனமாக செயல்படும் போதுதான் போராட்டம் ஏற்படுகிறது.

நமக்கு ஏற்படும் பிரச்சினைகளை நாம் மூன்றாகப் பிரித்துக்கொண்டு இருந்தோம்.

முதல் வகை பிரச்சினைகள் முழுமையாக அகம்– மனம் சார்ந்தவை.

**- Totally psychological.**

இரண்டாம் வகை பிரச்சினைகள் முழுமையாக புறம் சார்ந்தவை.

– செயல் சார்ந்தவை.

**-Totally physical.**

இவை இரண்டையும் நாம் ஓரளவு பார்த்துவிட்டோம்.

முதல் வகைப் பிரச்சினை சம்பந்தமாக நாம் எதுவும் செய்யத் தேவையில்லை.

இரண்டாம் வகைப் பிரச்சினைகள் அனைத்தையும் நாம் நமது செயல்களின் மூலம் மட்டுமே எதிர்கொள்கிறோம்.

இனி நாம் நமது மூன்றாவது வகைப் பிரச்சினைக்கு வருவோம்.

நமது குடும்பத்தினர் ஒருவருக்கு உடல்நிலை சரியில்லை. இங்கு தேவையான சிகிச்சையை மேற்கொள்ள வேண்டிய செயல் உள்ளது.

அதேநேரம் அவருக்கு என்ன ஆகுமோ என்ற மனக் கவலையும் நமக்கு ஏற்பட்டு விடுகிறது.

கணவன் மனைவியிடம் பிரச்சினை, பங்காளிகளுக்குள் பிரச்சினை, பக்கத்து வீட்டுக்காரர்களுடன் பிரச்சினை,

–என அகமும் புறமும் பின்னிப் பிணைந்து கிடக்கும் பிரச்சினைகள் ஆயிரக்கணக்கில் உள்ளன.

இங்கு செயல் ரீதியான பிரச்சனையும் உள்ளது; மனரீதியான பிரச்சினையும் உள்ளது.

செயல் ரீதியாகவும் இங்கு நமக்கு செயல் உள்ளது. அதே நேரம் நமக்கு ஏற்படும் மனப் பாதிப்பு அந்த செயலைக் கூட சிக்கல் மிகுந்ததாக ஆக்கி விடுகின்றது.

நமக்கோ நமது குழந்தைக்கோ உடல் நலம் பாதிக்கப்பட்டு விடுவதாக வைத்துக் கொள்வோம்.

இந்நிலையில் நம் மனதில் எந்த வித பாதிப்பும் ஏற்படாத பட்சத்தில் உடல் நலத்தை சீரமைக்கும் முயற்சியில் கூட இறங்கமாட்டோம்.

நமது மனப் பாதிப்புதான் உந்து சக்தியாக இருந்து நமது செயலைத் தூண்டுகிறது. அதன் காரணமாகவே நாமும் தேவையான சிகிச்சைகளை எடுத்துக் கொள்கிறோம்.

இன்று காலையில் அன்பர் ஒருவர் தொடர்பு கொண்டு பேசினார். அவருக்கு முதுகில் புண் ஏற்பட்டுள்ளதாகவும், இதுபோன்ற புண்கள் ஏற்பட்டுதான் அவருடைய முன்னோர்கள் சிலர் இறந்து விட்டதாகவும் அதனால் மரணபயம் ஏற்பட்டுள்ளதாகவும் கூறினார்.

இங்கு இவருக்கு இரண்டு விதமான பிரச்சினைகள். அவருக்கு ஏற்பட்ட புண்ணுக்கு சிகிச்சை எடுத்துக்கொள்ள வேண்டும். சிகிச்சை எடுத்துக் கொள்வதற்கான தூண்டுதலாக அவர் தனது பயத்தை பயன்படுத்திக் கொள்ளலாம். ஆனால் மரண பயத்திலிருந்து அவர் விடுபடாவிட்டால் என்ன ஆகும்? மாத்திரைக்குக்கூட கட்டுப்படாத இரத்த கொதிப்பு அவருக்கு ஏற்பட்டுவிட்டது.

அவரை நிலைகுலையச் செய்யும் பயத்திலிருந்தும் அவர் விடுபட்டாக வேண்டும்.

உடல் நலப் பாதிப்பு என்பது உண்மையில் புறப் பிரச்சினை மட்டுமே.

அதைச் செயல் மூலம் மட்டுமே எதிர்கொண்டாக வேண்டும்.

ஆனால் அதில் நமது எதிர்பார்ப்புகளை இணைத்துக் கொள்ளும்போது அது மனோரீதியான பிரச்சினையாகவும் ஆகிவிடுகிறது.

இவ்வாறு நாம் எதிர்கொள்ளும் பல விதமான பிரச்சனைகளில் அகமும் புறமும் கலந்து சிக்கல்களை ஏற்படுத்தி விடுகின்றன.

இங்கு முழு மனம் செயல்படுமேயானால் தேவையற்ற மனக் கலக்கம் ஏற்படாது.

உணர் மனதின் அறியும் தன்மை மட்டும் செயல்பட்டாலும் தேவையற்ற கலக்கம் ஏற்படாது.

ஆனால் உணர் மனதின் அறிவு மற்றும் அகங்கார பகுதிகளின் செயல்பாட்டினாலேயே, இந்த மன பதட்டங்கள் ஏற்பட்டு விடுகின்றன.

நாம் ஏதாவது செய்யவேண்டுமானால் நமது அறிவின் உதவியோடுதான் செயல்பட்டாக வேண்டும்.

தேவைக்கு அதுதான் வழிகாட்ட வேண்டும். ஆனால் தேவையில்லாதவற்றுக்கும் அது வழி காட்டி விடுகிறது.

எட்டக் கூடியதை நோக்கி தாவிக் குதிப்போமானால் அதனைப் பிடித்து விடலாம். ஆனால் எட்டாததை நோக்கி குதிப்போமாயின் என்ன ஆகும்?

அடிபட்டு காயம்தான் ஏற்படும்.

நாம் எதிர்கொள்ளும் பிரச்சினைகளில் எட்டக்

கூடிய பகுதியும் உள்ளது, எட்டாத பகுதியும் உள்ளது.

எட்டாத பகுதியை அது தனக்கு எட்டாத பகுதி என்பதை முதலில் நமது அறிவு ஒப்புக்கொள்ள வேண்டும்.

எட்டாத பகுதியை என்ன செய்வது? எட்டாத பகுதி சம்பந்தமாக ஏதாவது ஓர் ஏற்பாடு செய்யாத வகையில் நமது அறிவு ஏதாவது ஒரு முயற்சியில் ஈடுபடவும் நேர்ந்து விடுகிறது.

அப்படி எட்டாத பகுதி நம்மை மீறிய ஒன்று என்று முடிவு செய்வதோடு மட்டும் நின்று விடாமல் அதை சீரமைக்கும் பொறுப்பை முழு மனத்திடமோ அல்லது இறைவனிடமோ ஒப்புக்கொடுத்து விட வேண்டும்.

எட்டியதை மட்டுமே ஈடுபாட்டோடு நாம் செய்திடும்போது, முழு மனமே பொறுப்பை ஏற்றுக்கொள்கிறது.

–இறைவனே பொறுப்பை எடுத்துக்கொள்கிறான்.

**முழு மனதின் செயல் நலமாகவே முடியும்.**

**இறைவனின் செயல் நலமாகவே அமையும்.**

**எட்டியதை எடு; எட்டாததை கொடு.** ★

# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்

ஸ்ரீபகவத் மிஷன் மீதும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் ஞானத் தெளிவை உலகம் முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக Download செய்து கொள்ளும் வசதியையும் குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

தினந்தோறும் Zoom meeting மூலமாக சத்சங்கங்கள் நடத்தி வருகிறோம்.

இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கிறது.

மேலும் ஐயாவின் ஆலோசனைப்படி சென்னையில் நமது ஸ்ரீ பகவத் பவன் அமைப்பதற்கான முயற்சியையும் செய்துவருகிறோம்.

நாம் ஏற்கனவே ஆலோசித்தப்படி, விற்பனைக்கு தயாராக இருந்த இரண்டு பிளாட்களை வாங்குவது என தீர்மானித்த நிலையில் பொருளாதார பற்றாக்குறையால் ஒரு பழைய பிளாட் ஒன்று மட்டும் அனைவரிடமும் உதவி கேட்க அவகாசம் இல்லாததால் நமது மிஷனின் Founderகளாக இருக்கும் உறுப்பினர்கள் சிலரிடம் மட்டும் வட்டியில்லா கடனாக பெற்றும் மேலும் பற்றாக்குறை தொகைக்கு ஐயாவின் குடும்ப நகையை வங்கியில் அடமான கடனாகப் பெற்று அய்யா தன் மகன் குடும்பத்துடன் தங்கும் வகையில் ஒரு பிளாட் வாங்கிவிட்டோம்.

தற்போது ஐயா எதிர்கொள்ளும் நகை கடன் நிதிப் பிரச்சினைக்கு தேவைப்படும் தொகை ரூபாய் 13 லட்சம். இந்த நகை கடனை திருப்பி செலுத்த வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கிறோம்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1. ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானப் புரிதலை உலகம் முழுவதும் கொண்டு செல்வது.

2. ஸ்ரீ பகவத் மிஷனின் இந்தப் பயணத்தில் ஞானத்தை கொண்டு சேர்ப்பதோடு ஐயாவை பராமரித்து அவரது எளிய தேவைகளையும் அவர் கேட்காமலே பூர்த்தி செய்ய வேண்டும் என்பதே நம் அனைவரின் நோக்கம்.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதந்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம்.

ஆனாலும் இது தற்போது போதியதாக இல்லை. மிகவும் பற்றாக்குறையாகவே இருக்கிறது.

தற்போது நகை கடனை அடைக்க வேண்டிய அவசர தேவையில் இருக்கிறோம்.

நன்கொடையாகவோ அல்லது வட்டி இல்லா கடனாகவோ வழங்கி உதவ வாய்ப்புள்ளவர்கள், முன் வருபவர்கள் நம்மோடு தொடர்புகொள்ள வேண்டுகிறோம்.

பயனடைந்தவர்கள் ஒன்றிணைந்து நமது பயணத்தை தொடர்வோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்.**

**9994205880, 9789165555.**

V.A.P. சரவணன்
செல் : 99942 05880

# ? கேள்வி பதில்...

## ஏற்றுக்கொள்ளும் தன்மை -அன்பின் செயல்பாடு என்றால் என்ன?

**கேள்வி** : நான் ஸ்ரீபகவத்அய்யாவின்நூல்களைப் படித்து வருகிறேன். அவரது உரைகளை மீட்டிங் வாயிலாக கேட்டுக்கொண்டு வருகிறேன். மனதின் இயக்கத்தைப் பற்றிய பல விஷயங்கள் நன்றாக புரிகின்றது. தற்போது ஸ்ரீபகவத் அய்யா பேசி வரும் அன்பின் செயல்பாடு என்றால் என்ன? Total Mind, Conscious Mind, Receptive Mode, Reactive Mode போன்றவற்றை கொஞ்சம் தெளிவுபடுத்தவும்?

**பதில்:** முழு மனம் -Total Mind என்பது 100% இயற்கையானது. அதில் உணர் மனம் 25%, புத்தி 25%, சித்தம் 25%, அகங்காரம் 25% என்ற நான்கு பகுதிகளையும் உள்ளடக்கமாக கொண்டது.

இனி முழு மனதின் நான்கில் ஒரு பகுதியான Conscious Mind என்ற உணர் மனதின் செயல்பாட்டினை சற்று விரிவாக பார்ப்போம்.

உணர் மனம் – Conscious Mind என்றால் என்ன?

Conscious Mind – உணர் மனம் – நமக்கு வெளிப்படையாக தெரிகின்ற மனம்.

நாம் சந்திக்கும் ஒவ்வொரு சூழ்நிலையின் போதும் மிகவும் வெளிப்படையாக தெரியும் உணர்வுகளும் எண்ணங்களும் சேர்ந்த பகுதிதான் இந்த உணர் மனம் ஆகும்.

இந்த உணர் மனம் இரு வகையில் செயல்படக்கூடிய தன்மையில் அமைந்துள்ளது.

Receptive mode, Reactive mode, இந்த 2 பகுதிகளுமே முழு மனதின் முதல் பகுதியான உணர் மனம் என்ற பகுதியை சேர்ந்தது.

அதாவது Receptive mode 70%, Reactive mode 30% என்ற பங்கின் அடிப்படையில் செயல்படக்கூடியது.

Receptive mode என்றால் என்ன?

உணர் மனதின் பிரதான செயல்பாடுதான் இந்த Receptive mode ஆகும்.

இது நாம் ஒரு சூழ்நிலையை சந்திக்கின்ற பொழுது நமது ஐந்து புலன்கள் மூலமாக ஏற்படுகின்ற உணர்வுகளையும் அனுபவங்களையும் குறிப்பிடுகிறது.

கண்கள் வழியாக ஒரு காட்சியைப் பார்ப்பது,

காதுகள் வழியாக ஒரு சத்தத்தை கேட்பது,

மூக்கின் வழியாக வாசனையை நுகர்வது,

நாக்கின் வழியாக சுவைகளை உணர்ந்து அறிவது,

உடலின் வழியாக உடல் உணர்வுகளை உணர்ந்து அறிவது

என மேற்சொன்ன ஐந்துபுலன்களில் ஏற்படும் அத்தனை அனுபவங்களையும் நமது உணர் மனமே உணர்ந்து அறிகிறது.

5 புலன்களை தொடர்ந்து ஆறாவது புலனான மனமும் எண்ண உணர்வுகளை வெளிப்படுத்தி அனுபவமாக வெளிப்படுகிறது. இப்படி புலன்களும், மனமும் வெளிப்படுத்தும் ஒட்டுமொத்த அனுபவங்களை உணர்வதுதான் உணர் மனதின் 75சதவீத செயல்பாட்டுப் பகுதியைக் கொண்ட Receptive mode ன் பிரதான அம்சம் ஆகும்.

இன்னும் எளிமையாக விளங்கிக் கொள்ள மேலும் ஓர் உதாரணத்தை பாப்போம்.

ஒரு நிலைக்கண்ணாடி எப்படி தன் முன்னே தெரியும் அனைத்து பொருட்களையும் அப்படியே பிரதிபலித்து காட்டுகிறதோ, அதேபோல இந்த உணர் மனம், தான் எதிர்கொள்ளும் சூழ்நிலைக்கு ஏற்ப தாமாகவே மனதில் எண்ண உணர்வுகளை பிரதிபலிக்கும். நிலைக்கண்ணாடியில் பிரதிபலிப்பதுபோல் இது வெறும் பிரதிபலிப்பு மட்டுமே. இப்படி பிரதிபலிப்பது முழுவதும்

இயற்கையானது.

இன்னும் ஆழமாக புரிந்து கொள்ள, எல்லா சுவைகளையும் உணர்ந்து அறியும் நாக்கின் அறி நிலையைப் போன்றது. மேற்சொன்ன கண்ணாடி பிரதிபலிப்பையும், எல்லா சுவைகளையும் அறியும் நாக்கின் அறி நிலையைப் போன்றதுதான் 70% பகுதியான உணர் மனதின் செயல்பாடு.

இதைத்தான் Receptive Mode என்று கூறுகிறோம்.

Reactive mode என்றால் என்ன?

உணர் மனமானது 70% Receptive Mode-ல் செயல்படும். மீதமிருக்கும் 30% உணர் மனதின் தன்மையை Reactive mode என்று கூறுகிறோம். இதில் 10% புத்திக்கும் 10% சித்தத்திற்கும் 10% அகங்காரத்தை உள்ளடக்கமாக கொண்டது.

Receptive mode-ல் உணர் மனம் உணர்ந்து கொண்ட பிறகு அதற்கு தேவையான புறச் செயலுக்கான சிந்தனைகளை சிந்திப்பது புத்தியின் வேலை.

புத்தி செயல்படுவதற்கு தேவையான சக்திகளை அளிப்பது சித்தத்தின் வேலை. சித்தத்தின் சக்தியை கொண்டு புறச் செயலை செய்வது அகங்காரத்தின் வேலை.

இந்த Reactive mode ஆனா புத்தி-அகங்காரத்துக்கு Receptive mode-ல் எந்த வேலையும் இல்லை.

அதாவது, நிலைக்கண்ணாடியின் பிரதிபலிப்பில் எந்த வேலையும் இல்லை. எல்லா சுவையையும் அறியும் நாக்கின் தன்மையிலும் எந்த வேலையும் இல்லை என்பதை எஞ்சியிருக்கும் 30% சதவீதமான புத்தியும் அகங்காரமும் புரிந்து கொள்ள வேண்டும்.

அன்பின் செயல்பாடு என்றால் என்ன?

அன்பின் செயல்பாடு என்பது நம்முடன் இணைந்து செயல்படும் மற்றவர்களை எந்த மாற்றமும் செய்யாது முழு சுதந்திரம் அளித்து அவர்கள் இருக்கும் நிலையுடன் அப்படியே நாம் ஏற்றுக்கொள்வதுதான்.

இது நமது உணர் மனதின் Receptive mode-ன் செயல்பாட்டினை போன்றது.

இப்படி நாம் மற்றவர்களை ஏற்றுக்கொள்ளும் தன்மைக்கு உதவிகரமாக வருவதற்கே Reactive mode-ன் மூன்று தன்மைகளான புத்தி ,சித்தம், அகங்காரம் இருக்கிறது. நமது அன்பின் செயல்பாடான ஏற்றுக்கொள்ளும் தன்மைக்கு உதவிகரமாக புத்தி சித்தம், அகங்காரம் அமைந்தால் நமது அன்பின் செயல்பாடு மிகவும் சிறப்பாக இருக்கும்.

ஏற்றுக்கொள்ளும் (Receptive Mode) அன்பின் செயல்பாட்டுக்கு எதிராக நமது அகங்காரம் செயல்படும் போது நமது ஏற்றுக்கொள்ளும் தன்மை தனது பங்கினையும் நமது அகங்காரத்திற்கு வழங்கி விடுகிறது. அகங்காரம் உணர் மனதை நிர்வாகிக்கும்போதுதான் நாம் எல்லா பிரச்சனைகளையும் சந்திக்கின்றோம்.

அப்படி எனில் நாம் என்னதான் செய்ய வேண்டும்?

உணர் மனதின் செயல்பாடு – அன்பின் செயல்பாடு இரண்டுமே ஒன்று தான். இதில் 70% உணர் மனதின் செயல்பாட்டில் Receptive mode-தான் பிரதான அம்சம் கொண்டது. இதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். இந்த பிரதான உணர் மனதின் செயல்பாட்டிற்கு எஞ்சி இருக்கும் 30% உணர் மனதின் செயல்பாடான Reactive mode ஆனது Receptive mode-ன் செயல்பாட்டிற்கு உதவி செய்யவே இருக்கின்றன என்பதை தெளிவாக புரிந்து கொண்டால் போதும். இதுதான் நாம் புரிந்து கொள்ள வேண்டிய புரிதலே.

எதிர்த்து செயல்பட்ட 30% உணர் மனமும் ஏற்றுக்கொள்ளும் தன்மையான 70% உணர் மனதின் தன்மைக்கு உதவிகரமாக மாறிவிடுகிறது. ஏற்றுக்கொள்ளும் தன்மையான உணர் மனம் பிளவு இன்றி முழுமையை அடைகிறது. இயற்கையாக செயல்படுகிறது.

இப்படி நமது உணர் மனதின் செயல்பாட்டினை பிரித்து புரிந்துகொள்ளும்போது நாம் சந்திக்கும் எல்லா நிகழ்வுகளிலும் ஏற்றுக்கொள்ளும் தன்மையே முதன்மையை அடைகிறது. அதற்கு உதவிகரமாகவே புத்தி, சித்தம், அகங்காரம், என்பவை தங்களுடைய பங்கினையும் ஏற்றுக் கொள்ளும் தன்மைக்கு வழங்கி விடுகிறது. அதனால் முழுமையான அன்பின் இயக்கம் செயல்படுகிறது. இப்படி உணர் மனதின் இயக்கத்தை முழுமையாக புரிந்துகொண்டு செயல்படுவதுதான் இயற்கையான அன்பின் செயல்பாடு ஆகும்.




புத்தர் பெருமானிடம் குடும்பஸ்தன் ஒருவன் வந்தான். "என்ன வாழ்க்கை வாழ்கிறேன்! மிகவும் வெறுப்பாய் இருக்கிறது. மழை பெய்தாலும் தொல்லைப் படுகிறேன். பெய்யா விட்டாலும் தொல்லைப் படுகிறேன். தொழில் செய்வதில்தான் பிரச்சினை என்றால் குடும்பத்தில் அதைவிடவும் பிரச்சினை அதிகமாக இருக்கிறது...

"என் மனைவி மீது உயிரையே வைத்திருக்கிறேன். ஆனால் அவளோ என் பேச்சைக் கேட்பதே இல்லை. நானும் மன்றாடிப் பார்த்து விட்டேன். அவள் தன் இயல்பை மாற்றிக்கொள்வதாக இல்லை. என் மகனும் அவளைப் போலவே உள்ளான். இந்தக் குடும்பத் தொல்லைகளில் இருந்து விடுபட நீங்கள்தான் நல்ல வழி காட்ட வேண்டும்" என்று வேண்டினான்.

புன்முறுவலுடன் அவனைப் பார்த்த பெருமான் "என்னால் உனக்கு எந்த உதவியும் இதில் செய்ய முடியாது" என்றார்.

அதிர்ச்சி அடைந்த அவன் "உலகத்திற்கே வழி காட்டும் ஞானி நீங்கள். எனக்கு மட்டும் உதவி செய்ய மாட்டேன் என்கிறீர்களே. இது நியாயமா?" என்று கேட்டான்.

"வாழ்க்கை என்றாலே ஒவ்வொருவர்க்கும் நூறு பிரச்சினைகள் இருக்கத்தான் செய்யும். அவற்றுள் சில பிரச்சினைகள் நீங்கும், சில பிரச்சனைகளுக்கு கடைசிவரை தீர்வு கிடைக்காது. புதிது புதிதாகப் பிரச்சினைகள் தோன்றிய வண்ணம் இருக்கும். எப்போதும் தொல்லைப்பட்டுக் கொண்டுதான் இருக்க வேண்டும்" என்றார் அவர்.

"அப்படியானால் நீங்கள் வழங்கும் ஞானம் எதற்காக? உங்களது அறிவுரையை ஏன் கேட்க வேண்டும்?" என்று கேட்டான்.

"ஞானம் அந்த நூறு தொல்லைகளைத் தீர்க்கப் பயன்படாது. நூற்றி ஓராவது தொல்லையைத் தீர்க்கப் பயன்படும்." என்றார் புத்தர்.

"அது என்ன புதிய தொல்லை?" என்றான் அவன்.

'நூற்றி ஓராவது தொல்லை வேறு ஒன்றும் அல்ல. உனக்கு இருக்கும் நூறு தொல்லைகளையும் தொல்லைகளாக நினைத்து மாற்ற நினைக்கிறாயே...! அதுதான் நூற்றி ஓராவது தொல்லை. குடும்ப உறுப்பினர்களை மாற்ற முயற்சிப்பதை விட்டு விட்டு இது அவர்களது இயல்பு என்று, இருக்கும் நிலையில் அவர்களை ஏற்றுக் கொள்வதே சரி. ஏற்றுக் கொண்ட நிலையில் எல்லாத் தொல்லைகளிலிருந்தும் விடுபட்டுவிடலாம். " என்றார் பெருமான் அவர்கள்.

"இயற்கை சூழ்நிலைகளையும் மாற்ற முடியாது, எனது குடும்ப உறுப்பினர்களையும் மாற்ற முடியாது. போனால் போகட்டும்" என்ற குடும்பஸ்தன்,

"ஆனால் என் மனதிலும் இப்படி மாற்ற வேண்டிய பல விசியங்கள் உள்ளன. அதை எப்படி மாற்றுவது?" என்றான்.

புத்தர், "உன் குடும்ப உறுப்பினர்கள் போல்தான் உன் மனதில் மாற்ற வேண்டிய பல விஷயங்களும். எதையும் மாற்ற முடியாது என தெரிந்துகொண்டால் எதுவும் உனக்கு பிரச்சினை இல்லை." என்றார்.

நன்கு புரிந்து கொண்டான் குடும்பஸ்தன்.

தொல்லைகளை போக்க வேண்டும் என்று போராடுவது தீர்வல்ல. அவைகளை ஏற்றுக் கொள்வதே அவற்றிலிருந்து விடுபடுவதற்குத் தீர்வு என்பது புரிந்தது அவனுக்கு.

ஒட்டுமொத்தமாக மனதில் எந்த பொறுப்புகளையும் சுமக்காது, வெளி உலகில் நம்மால் முடிந்ததை செய்தால் மட்டும் போதும் என்ற முடிவுடன் தெளிவு பெற்றான்.

# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

ஆன்மிகம் என்றாலே உலகியல் வாழ்வில் இருந்து வேறுபட்டு தனித்துவத்துடன் பல்வேறு அனுஷ்டானங்களை கடைபிடித்து வாழ்ந்து வருவதையே பலரும் வழக்கமாக கொண்டிருக்கிறார்கள். இவர்கள் கடைபிடிக்கும் அனுஷ்டானங்களில் ஏதோவொன்றை தவறவிடும்போது அவர்களுக்கு தவறு செய்துவிட்டதாக குற்ற உணர்வும் ஏற்படுகிறது.

உண்மையில் எந்த மதமானாலும் சரி, ஆன்மிகம் என்பது அகம் சார்ந்ததுதான். புறம் சார்ந்ததல்ல. புறத்தை பொறுத்தவரை தர்ம நியாயத்திற்கு உட்பட்டு சூழ்நிலைகளுக்கு தகுந்தாற்போல் செயல்படுவதே சரியானதாகும்.

அகத்தைப் பொருத்தவரை அனுஷ்டானங்கள் அனைத்தும் ஆரம்பகால சாதகர்களுக்கு சரியானதாக இருக்கலாம். ஆனால் முடிவான நிலை என்பது தன்னை அறிந்து அகச் சரணாகதி அடைவதே சரி.

ஒவ்வொரு மதத்தினருக்கும் அனுஷ்டானங்கள் வேறுபடலாம். ஆனால் முடிவான நிலையான முக்தி என்ற விடுதலையானது ஒன்று தான். அது அகச் சரணாகதியாலே ஏற்படுகிறது.

இந்த அகச் சரணாகதி என்பது முயற்சியால் வருவதன்று. அகத்தளவில் செய்வதற்கு எதுவும் இல்லை என்று நமது அக முயற்சியைக் கைவிடுவதால் வருவது.

இதுவரை ஆன்மிகத்தில் பயிற்சி முயற்சியில் இருப்பவர்கள் சரணாகதி அடைவதற்கு பல காலங்கள் ஆகும்.

அதுவும் தீவிர பயிற்சி முயற்சியில் ஈடுபட்டு இருப்பவர்களில் லட்சத்தில் ஒருவரால்தான் இந்த சரணாகதியை அடைய முடியும்.

ஆன்மிகத்தில் இதுவரை இருந்து வந்த அணுகுமுறையை மாற்றி ஆர்வமுள்ள அனைவரும் அகச் சரணாகதி அடைவதற்கான புரிதல் வழியைதான் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள் வழங்கி வருகிறார்கள்.

தற்போது மனித குலத்தின் மிகப் பெரும் பிரச்சினையே மனப் போராட்டம்தான். இதுவே மனித குலம் எதிர்கொள்ளும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் ஆணிவேர். மனிதர்களுக்குள் வஞ்சகமும் ஏமாற்றும் அதிகரித்துக் கொண்டு மனித குலத்தின் அழிவை நோக்கி சென்று கொண்டிருக்கும் இந்த வேளையில், மனித குலத்துக்கு இயற்கையின் வரமாக வந்தவர்தான் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் வழங்கும் மனதைப் பற்றிய அறிவியல் ரீதியான புரிதலே அனைவருக்கும் ஞானத் தெளிவை வழங்குவதோடு அகச் சரணாகதியையும் ஏற்படுத்தி விடுகிறது.

அகச் சரணாகதி அடைந்தவர்கள், தனித்து ஆன்மிக அனுஷ்டானங்கள் எதுவும் செய்யத் தேவையில்லை.

உலகியலோடு ஒன்றுபட்டே வாழலாம்.

இவர்கள் வாழ்வே ஆன்மிக வாழ்வு; முழுமையான வாழ்வு.

ஐயா வழங்கும் ஞானப் புரிதலால் இந்நிலை அடைந்து விடுதலையோடு வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் ஏராளமானோர்.

இது வாழ்வின் அத்தியாவசியத் தேவை என்று அறியாமலும், அறிந்தவர்கள் வழித் தெரியாமலும் துன்புறுவோர் இவ்வுலகத்தில் பலர்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் தன்னலம் கருதாது எளிமையின் திரு உருவமாக இருந்து இதனை உலகிற்கு வழங்கி வருகிறார்கள்.

ஸ்ரீ பகவத் மிஷனின் நோக்கம் இந்த எளிமை படுத்தப்பட்ட ஞானப் புரிதலை உலக மக்களுக்கு கொண்டு சேர்க்க வேண்டும் என்பது மட்டுமே.

ஸ்ரீ பகவத் மிஷனின் இந்தப் பயணத்தில் ஞானத்தை கொண்டுசேர்ப்பதோடு ஐயாவையும் பராமரித்து அவரது எளிய தேவைகளையும் அவர் கேட்காமலேயே பூர்த்தி செய்ய வேண்டும் என்பதே புரிந்து கொண்ட நம் அனைவரின் நோக்கம். இதற்கு சிறிது பொருளாதாரமும் தேவைப்படுகிறது.

இந்தத் தேவையைப் புரவலர்களாக வழங்கும் நன்கொடைகளை வைத்து ஓரளவுக்கு எதிர் கொண்டு வருகிறோம்.

ஆனால் இது தற்போது போதியதாக இல்லை.

தற்போது ஓர் அவசர தேவையில் இருக்கிறோம். உதவ வாய்ப்புள்ளவர்கள், முன் வருபவர்கள் நம்மோடு தொடர்புகொள்ள வேண்டுகிறோம்.

பயனடைந்தவர்கள் ஒன்றினைந்து நமது பயணத்தை தொடருவோம்....

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்.**



Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555